உ
சிவமயம்



## மல்ஹணர் பாடிய

# மல்ஹண ஸ்தவம்

## || मल्हणस्तवः ||

**தமிழ் உரை:**
**டாக்டர் ந. கங்காதரன்** எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.
**ஸம்ஸ்க்ருத விரிவுரையாளர், சென்னை ஸர்வகலாசாலை**

உ
சிவமயம்

## மல்ஹணர் பாடிய

# மல்ஹண ஸ்தவம்

# ॥ मल्हणस्तवः ॥

## உரையாசிரியர் குறிப்பு

சிவபெருமானின் ஸ்தோத்திரங்களின் தொகுப்பாக '**சிவபஞ்சஸ்தவீ**' என்று சிறப்பாகக் கூறப்படுபவைகளில் மல்ஹண கவியின் 'மல்ஹண ஸ்தவமும்' ஒன்று கும். இந்த 'பஞ்சஸ்தவீ' யில் மற்ற நான்கும் முறையே புஷ்பதந்தரின் சிவ மஹிம்ந ஸ்தவமும், தண்டி மஹாகவியின் அநாமய ஸ்தவமும், ஹலாயுதரின் சிவஸ்தவ மும், பில்ஹணரின் பில்ஹண ஸ்தவமுமாகும். இம்மாதிரி சிறப்பான கௌரவத்தைப் பெற்ற இந்த மல்ஹண ஸ்தவம் இதுகாறும் தேவ நாகரி எழுத்திலோ, அல்லது கிரந்த எழுத்திலோ அச்சிடப்பெற்றதாகத் தெரியவில்லை. தெலுங்கு எழுத்தில் அச்சிடப் பட்டுள்ள 'பஞ்சஸ்தவீ' * என்னும் ஸ்தோத்திரத் தொகுப்பிலும், தெலுங்கு மொழி பெயர்ப்பிலும் கிடைக்கிறது. இது தவிர சென்னை கீழ்க்கலை சுவடி நூலகத்தில் ஓலையில் ஸம்ஸ்க்ருத உரையுடன் பல பிரதிகள் கிடைக்கின்றன.

[* சிகந்தராபாத், 1943. பக்கம் 63-98.]

## ஆசிரியரின் வரலாறு

காச்மீரத்திலுள்ள பாரதீபீட நகரத்தில் ஸுவர்ண பட்டாரகரின் மகனுகப் பிறந் தார் மல்ஹணர். தன் மகனுக்கு நிறைய செல்வத்தை விட்டு மரணமடைந்தார் அவர் தந்தை. ஒரு சமயம் மல்ஹணர் கோவிலுக்குச் செல்லும்பொழுது அங்கு 'புஷ்பகந்தி' என்று பெயர் கொண்ட ஒரு தேவதாசியிடம் தன் மனத்தைப் பறிகொடுத்தார். அவளை மல்ஹணி என்றழைத்து, பின்னர் அவளை மகிழ்விப்பதில் தன் செல்வம் யாவையும் இழந்தார். ஒரு நாள் மற்றெரு புதிய செல்வந்தரிடமிருந்து நிறைய பணம் பெற ஆசை கொண்ட அவளுடைய தாய் அவளை நாடி வந்த மல்ஹணரைத் துரத்தி விட்டாள். ஆனுல் மல்ஹணரின்பால் உண்மையான அன்பு கொண்டிருந்த மல்ஹணி அந்தப் புதிய செல்வந்தன் அறியாதவண்ணம் நள்ளிரவில் மல்ஹணரைச் சந்திக்க 'விஜயேசுவரரின்' ஆலயத்திற்கு வருவதை வழக்கமாகக் கொண்டாள். அப்படி சந்திக் கும் பொழுதெல்லாம் தன்னை மகிழ்விப்பதை விட்டு சிவபெருமானைப் போற்றுவதில் ஈடுபடுமாறு மல்ஹணருக்கு அவள் அறிவுரை கூறினுள். மல்ஹணரும் அவள் கூற்று சரி என்று ஒப்புக்கொண்டார். இருப்பினும் தன் உள்ளம் பூராவும் கவர்ந்து அதிலே அவள் குடிகொண்டிருப்பதால் அவளைத்தவிர தன்னுல் யாரையும் நினைக்கக்கூட

முடியாது என்றும் ஒருவேளை சிவலிங்கத்தினருகே அவள் நின்றால் அவரால் சிவனுரைத் துதித்துப் பாட முடியலாம் என்றும் கூறினர். இவ்விதமாகத்தான் 39 செய்யுட்களைக் கொண்ட இந்தத் தோத்திரமானது இயற்றப்பட்டது என்று கூறப்படுகி றது. கடைசியில் சிவனுர் அவர் முன்தோன்றி அவரையும், மல்ஹணியையும், அவள் தாயையும், அவள் வளர்த்த கிளியையும் பிறவிக் கடலிலிருந்து உய்வித்ததாகக் கூறப்படுகிறது.

## அவருடைய காலம்

அவர் வாழ்ந்திருந்த காலத்தைப் பற்றி திட்டவட்டமாக எதுவும் கூறுவதற் கில்லை. அவர் காச்மீரத்தைச் சார்ந்தவர் என்று முன்னரே கூறப்பட்டது. கி.பி. 1230-ல் வாழ்ந்த 'பால் குரிக்கி ஸோமநாதர்' என்னும் சைவர் தன்னுடைய **'பண்டிதாராத்ய சரித்திரம்'** என்னும் சைவ வரலாற்று நூலில் மல்ஹணரின் வரலாற்றைப் பற்றி கூறியுள்ளார். பின்னர் கர்நாடக மாநிலத்தைச் சார்ந்த 'விச்வாராத்யர்' என்பவர் ஸம்ஸ்க்ருதத்தில் அதற்கு விரிவுரை ஒன்றை எழுதினர். 'ஊரே தேசயாமாத்யர்' என்பவருடைய ஸம்ஸ்க்ருத உரையும் ஓலைச் சுவடிகளில் கிடைக்கின்றன.

சிவமஹிம்ந ஸ்தவத்திற்கு அடுத்தபடியாக மிகவும் சிறப்பாகக் கூறப்படுவது இந்த ஸ்தோத்திரம். 'புஷ்பகந்தி' என்னும் பதம் இந்த ஸ்தோத்திரத்தில் முதல் செய்யுளில் காணப்படுவது அவருக்கு மனதிற்கினிய 'புஷ்பகந்தி' என்னும் பெண்மணி யினுல் தான். இது விஷயத்தில் 'சிந்தாமணி' என்ற தனக்கு விருப்பமான பெண்மணி யின் பெயரை தன் காவியத்தில் சேர்த்திருக்கும் 'பில்வமங்கலரின்' போக்கை ஒத்திருக்கிறது இவரது போக்கு.

இந்த ஸ்தோத்திரத்தில் செய்யுட்கள் யாவும் 'வஸந்ததிலகா' விருத்தத்தில் அமைக்கப்பட்டுள்ளன என்று கவியே தன்னுடைய கடைசி செய்யுளில் கூறுகின்றர். சிவனைத் துதிப்பதாலேயே எல்லாவிதமான இன்பங்களும் கிடைக்கின்றன என்பதே இத்துதியின் சாரம்.

உ

சிவமயம்

### மல்ஹணர் பாடிய

# மல்ஹண ஸ்தவம்

# ॥ मल्हणस्तवः ॥

**कान्ताकचप्रचपुष्प सुगन्धिगन्ध-**
**लुब्धभ्रमदभ्रमरकर्बुरकन्धराय ।**
**गन्धर्वयक्षसुरसिद्धकिरीटकोटि-**
**सङ्घट्टघृष्टचरणाय नमः शिवाय ॥ १ ॥**

**காந்தாகசப்ரசபுஷ்ப ஸுக3ந்தி4க3ந்த4-**
**லுப்3த4ப்4ரமத3ப்4ரமரகர்பு3ரகந்த4ராய ।**
**க3ந்த4ர்வயக்ஷஸுரஸித்3த4கிரீடகோடி-**
**ஸங்க4ட்டக்4ருஷ்டசரணாய நமः ஶிவாய ॥ 1 ॥**

1. தன் மனைவியின் (பார்வதியின்) அடர்த்தியான கூந்தலின் நறுமணத்தின் மீது மோஹம் கொண்டு திரியும் பல்வேறு வண்ணங்களுடைய வண்டுகளையுடைய [வண்டுகளால் சூழப்பட்ட] கழுத்தை உடையவரும், கந்தர்வர், யக்ஷர், அமரர், சித்தர் முதலானவர்களின் கோடிக்கணக்கான கிரீடங்களின் உராய்தலினால் தேய்வு பெறும் காலடிகளை உடையவருமான சிவபெருமானுக்கு என் வணக்கம்.

உமையொரு பாகமுடைய சிவபெருமானுடைய வடிவைத் துதிக்கின்றார்.

தேவர் முதலானோர் பரமனை எப்பொழுதும் வணங்கிய வண்ணமிருக்கிறார்கள் என்னும் கருத்தை சிவானந்தலஹரீ பன்முறை கூறுகிறது.

**न ब्रह्मविष्णुवचसामपि गोचरस्त्व-**
**मस्मद्विधस्य किमहो तदवैमि सर्वम् ।**
**भक्तिस्तथापि शिव मां मुखरीकरोति**
**युष्मत्स्तुतौ कथय किं करवाणि देव ॥ २ ॥**

**ந ப்³ரஹ்மவிஷ்ணுவசஸாமபி கோ³சரஸ்த்வ-**
**மஸ்மத்³வித⁴ஸ்ய கிமஹோ தத³வைமி ஸர்வம் ।**
**ப⁴க்திஸ்ததா²பி ஶிவ மாம் முக²ரீகரோதி**
**யுஷ்மத்ஸ்துதௌ கத²ய கிம் கரவாணி தே³வ ॥ 2 ॥**

2. நான்முகன், நாரணன் முதலானவர்களாலும் விவரிக்க இயலாதவர் நீர். அந்தோ எம்மைப் போன்றவர் விஷயத்தில் அது அறவே முடியாது என்பதை நான் நன்கு அறிவேன். இருந்த போதிலும் ஓ சிவபெருமானே! பக்தியானது உங்களைத் துதிக்க என்னை ஊக்குவிக்கின்றது. ஓ தேவனே! உங்களை நான் துதிக்கட்டுமா?

பிரமன் முதலான தேவர்களாலேயே உம்மைப் பற்றி கூற முடியாத போது என்னால் எப்படி முடியும் என்கிறார் கவி.

**ये त्वां मरीचिचयचामरचारुचन्द्र**
**चूडामणे श्रुतिवचोभिरिहार्चयन्ति ।**
**मायाप्रपञ्चरचनानिचयं विलङ्घय**
**गच्छन्ति ते शिवपुरं रुचिरैर्विमानैः ॥ ३ ॥**

**யே த்வாம் மரீசிசயசாமரசாருசந்த்³ர**
**சூடா³மணே ஶ்ருதிவசோபி⁴ரிஹார்சயந்தி ।**
**மாயாப்ரபஞ்சரசனானிசயம் விலங்க⁴ய**
**க³ச்ச²ந்தி தே ஶிவபுரம் ருசிரைர்விமானை: ॥ 3 ॥**

3. எண்ணற்ற கதிர்களைச் சாமரம் போலப் பெற்றுள்ள அழகிய சந்திரனை தலையில் சூடியவரே! வேதத்தின் சொற்களால் எவர்கள் உம்மை வழிபடுகின்றனரோ அவர்கள் இந்த மாயையான பிரபஞ்சத்தின் கூட்டத்தையெல்லாம் கடந்து அழகிய விமானங்களில் மூலம் சிவபிரானின் பட்டணத்தை அடைகின்றனர்.

தம்மை துதிப்பவரை இம்மாயா பிரபஞ்சத்திலிருந்து விடுவிக்கின்றார் சிவனார்.

**उर्वीसमीरयजमानजलानलार्क-**
**सोमाम्बरादिभिरहो भवतस्तनूभिः ।**
**व्याप्तं समस्तभुवनं समवेक्ष्य विद्वान्**
**कुर्यान्न कोऽत्र भगवन्स्त्वयिपक्षपातः ॥ ४ ॥**

**உர்வீஸமீரயஜமானஜலானலார்க-**
**ஸோமாம்ப3ராதி3பி4ரஹோ ப4வதஸ்தனூபி4: ।**
**வ்யாப்தம் ஸமஸ்தபு4வனம் ஸமவேக்ஷ்ய வித்3வான்**
**குர்யான்ன கோ(அ)த்ர ப4க3வன்ஸ்த்வயிபக்ஷபாத: ॥ 4 ॥**

**4.** பூமி, காற்று, யாகம் செய்பவன், நீர், நெருப்பு, சூரியன், சந்திரன், ஆகாயம் முதலான உம்முடைய உடல்களினுல் ஸகல லோகங்களிலும் பரவிநிற்கும் (வியாபித்திருக்கும்) உம்மைப் பார்த்து எந்த பண்டிதர்கள் தான் உம்மிடம் தனிப்பட்ட ஈடுபாடு கொள்ள மாட்டார்கள்?

ஈச்வரன் ஸர்வலோக வியாபியாக இருப்பதினுல் மற்றெல்லா தெய்வங்களையும் விட்டு பண்டிதர்கள் ஈச்வரன் பால் ஈர்க்கப்படுகின்றுர்கள். ஸர்வ வியாபியாகப் பரமன் இருப்பதை '**அஷ்டமூர்த்தி**' என்னும் சொல்லால் குறிப்பிடுவது வழக்கம். இந்த வடிவை காளிதாஸன் தன்னுடைய சாகுந்தல நாடகத்தின் முதல் ச்லோகத்திலும் புஷ்பதந்தர் தன்னுடைய சிவமஹிம்நஸ்தவத்தின் 26வது ச்லோகத்தில் [த்வமர்க்க: த்வம்ஸோம: ...] ஆதிசங்கரர் தக்ஷிணாமூர்த்யஷ்டகத்தின் 9வது ச்லோகத்திலும் [பூரம்பாம்ஸ்யநலோ...] விவரித்துள்ளனர்.

**ब्रह्मेन्द्रविष्णु सुरदानवलोकपालै-**
**रन्यैश्च सिद्धमुनिभिः परिपूजितं त्वा ।**
**दृष्ट्वा यदत्र पुनरिच्छति देवमन्यं**
**संसारिणो नरकहेतुरयं विमोहः ॥ ५ ॥**

**ப்3ரஹ்மேந்த்3ரவிஷ்ணு ஸுரதா3னவலோகபாலை-**
**ரன்யைஶ்ச ஸித்3த4முனிபி4: பரிபூஜிதம் த்வா ।**
**த்3ருஷ்ட்வா யத3த்ர புனரிச்ச2தி தே3வமன்யம்**
**ஸம்ஸாரிணோ நரகஹேதுரயம் விமோஹ: ॥ 5 ॥**

**5.** நான்முகன், இந்திரன், திருமால், தேவர்கள், அரக்கர்கள், திசைக்காவலர்கள், மற்றும் சித்தர்கள் முனிவர்கள் முதலானவர்களால் வணங்கப்பட்ட உம்மைப் பார்த்து விட்டு பின்னர் மீண்டும் எவரொருவர் மற்ற தெய்வத்தை விரும்புகின்றுர்களோ அது இல்வாழ்வில் ஈடுபட்டவர்களுக்கு நரகத்தைப்பெறக் காரணமானதொரு வேண்டாத மோஹம்.

எல்லாத் தெய்வங்களும் அவரவர் முறையில் சிவபெருமானை வழிபடுவதை சிவானந்தலஹரீ ச்லோகம் 30ல் கூறப்படுவதை இங்கு நினைவில் கொள்ளலாம்.

**त्वं पासि हंसि विदधासि तिरस्करोषि**
**मुक्तिं परां नयसि नित्यमशेषलोकान् ।**
**सर्वप्रदोऽसि शिव सर्वकरस्त्वमेवं**
**मत्वा विकल्पमिति जन्तुरलेपकः स्यात् ॥ ६ ॥**

**த்வம் பாஸி ஹம்ஸி வித³தா⁴ஸி திரஸ்கரோஷி**
**முக்திம் பராம் நயஸி நித்யமஶேஷலோகான் ।**
**ஸர்வப்ரதோ³(அ)ஸி ஶிவ ஸர்வகரஸ்த்வமேவம்**
**மத்வா விகல்பமிதி ஜந்துரலேபகः ஸ்யாத் ॥ 6 ॥**

6. நீர் காப்பாற்றுகின்றீர், அழிக்கின்றீர், செயல்படுத்துகின்றீர், மறைக்கின்றீர், எப்பொழுதும் மிச்சமின்றி லோகமனைத்தையும் உயர்ந்த மோக்ஷத்திற்கு அழைத்துச் செல்கின்றீர் எல்லாம் கொடுப்பவராக இருக்கின்றீர். ஓ! சிவபிரானே! நீர் இவ்விதம் எல்லாம் செய்பவர் என்று எண்ணி ஜீவன் களங்கமின்றி இருக்கலாம்.

சிவபெருமானின் பல செயல்களை எண்ணி ஜீவன் தவறெதுவும் செய்யாம லிருக்கலாம்.

**शाठ्येन येऽपि भगवन्तमनन्तशक्तिं**
**शम्भो भवन्तमभवं भविनो नमन्ति ।**
**तेऽप्यन्धकारमतिघोरकृतान्तदन्त -**
**यन्त्रान्तरालगहनं न पुनर्विशन्ति ॥ ७ ॥**

**ஶாட்²யேன யே(அ)பி ப⁴க³வந்தமனந்தஶக்திம்**
**ஶம்போ⁴ ப⁴வந்தமப⁴வம் ப⁴வினோ நமந்தி ।**
**தே(அ)ப்யந்த⁴காரமதிகோ⁴ரக்ருதாந்தத³ந்த -**
**யந்த்ராந்தராலக³ஹனம் ந புனர்விஶந்தி ॥ 7 ॥**

7. ஹே சம்புவே! எந்தக்கவிகளும் எல்லையற்ற சக்தியையுடையவரும் பிறப்பும் இறப்பும் அற்றவரும் பகவானும் ஆன உம்மை தங்களுடைய கபட்டுத் தன்மையுடன் வணங்குகின்றனரோ அவர்களும் இருள்சூழ்ந்ததும் மிகவும் கோரமான துமான இயமனின் பற்களான இயந்திரத்தின் இடையேயுள்ள அடர்த்தியான காட்டில் மீண்டும் நுழைவதில்லை.

அளவிட முடியாத சக்தியையுடைய சிவபெருமானைத் தொழுதும் கபடர்களுக் கும் பிறப்பிலிருந்து விமோசனம் கிடைக்கிறது. புஷ்பகந்தியை நினைவில் கொண்டு

சிவபெருமாஜனப் புகழ்ந்து பாட முஜனந்த தன்ஜனயே நிஜனவில் கொண்டு கவி இந்த ச்லோகத்தை கூறினுர் போலும்.

**कस्यापरस्य मकराहतघोरनक्र-**
**चक्र क्रमात् कमललोलजला च गङ्गा ।**
**खण्डेन्दु कोटिकरकोरक भारभाजि**
**बभ्राम बभ्रुणि जटापटले विमूढा ॥ ८ ॥**

**கஸ்யாபரஸ்ய மகராஹதகோ⁴ரனக்ர-**
**சக்ர க்ரமாத் கமலலோலஜலா ச க³ங்கா³ ।**
**க²ண்டே³ந்து³ கோடிகரகோரக பா⁴ரபா⁴ஜி**
**ப³ப்⁴ராம ப³ப்⁴ருணி ஜடாபடலே விமூடா⁴ ॥ 8 ॥**

8. வேறு எவருடைய பழுப்பு நிறமுள்ள சடைமுடியில் தான் மீன்கஜளக் கொல்லும் பயங்கரமான முதஜலகளின் சக்கரம் போன்ற வரிசையினுல் அசைந்தாடும் தாமரை மலர்கஜளயுடைய நீரை உடைய கங்கையானது பிறைச்சந்திரனின் எண்ண ற்ற கஜலகளின் மொட்டுகளின் பாரத்தைத் தாங்கிக் கொண்டு மனம் குழம்பித்திரிந் தது?

மற்றெவராலும் முடியாத அருஞ்செயஜல செய்தவர் சிவபெருமானன்றே? புவி யில் கங்கையின் தோற்றத்தைப் பற்றி வழங்கும் புராணக் கதையை நிஜனவூட்டுகி றது.

**प्रोत्तुङ्गपीवर घनस्तनहारभार -**
**विद्याधरी भुजलतायुग पाश्बद्धाः ।**
**ते पर्यटन्ति भगवन् गगने विमानै -**
**र्यैरर्चितो हर नरैरुमया सह त्वम् ॥ ९ ॥**

**ப்ரோத்துங்க³பீவர க⁴னஸ்தனஹாரபா⁴ர -**
**வித்³யாத⁴ரீ பு⁴ஜலதாயுக³ பாஶ்ப³த்³தா⁴: ।**
**தே பர்யடந்தி ப⁴க³வன் க³க³னே விமானைர் -**
**யைரர்சிதோ ஹர நரைருமயா ஸஹ த்வம் ॥ 9 ॥**

9. ஓ ஹரனே! எந்த மானிடர்களால் உமையுடன் கூட நீர் தொழப்பட்டு கின்றீரோ அவர்கள் எடுப்பான பருத்த கனமான ஸ்தனங்களின் பளுவை உடைய ‘வித்யாதர’ பெண்டிரின் கொடிபோன்ற புஜமாகின்ற கயிறுகளால் கட்டுண்டவர்களாய் விமானங்களின் மூலம் ஆகாயத்தில் இயங்கும் அங்கும் செல்கின்றுர்கள்.

உமையுடன் கூடிய சிவபெருமாளை வணங்குபவர்களுக்கு வித்யாதரர்களால் அனுபவிக்கப்படும் ஆனந்தம் கிடைக்கிறது.

'வித்தியாதரர்' என்பவர்கள் தெய்வீக சக்தி வாய்ந்த ஒரு வகையான தேவர்கள்.

**भेरी मृदङ्गसुरदुन्दुभिशङ्खनादै -**
**देवाङ्गना कलकलाकुलदिङ्मुखेषु ।**
**क्रीडन्ति दिव्यभवनेषु सहाप्सरोभि -**
**भक्तया कृतं तव पुरो मुखवादनं यैः ॥ १० ॥**

**பே4ரீ ம்ருத3ங்க3ஸுரது3ந்து3பி4ஶங்க2நாதை3ர் -**
**தே3வாங்க3ந கலகலாகுலதி3ங்முகே2ஷு ।**
**க்ரீட3ந்தி தி3வ்யப4வனேஷு ஸஹாப்ஸரோபி4ர் -**
**ப4க்தயா க்ருதம் தவ புரோ முக2வாத3னம் யை: ॥ 10 ॥**

10. எவர்களால் உம்முடைய முன்னர் பக்தியுடன் உங்கள் புகழ் பாடப் பெற்றதோ (அவர்கள்) பேரீ, மிருதங்கம், தேவ துந்துபி, சங்கு முதலியவற்றின் ஒலியினாலும் தேவ மடந்தையரின் கலகலவென்னும் ஒலியும் நிறைந்த நாற் திசை யிலுமுள்ள தேவர்களின் மாளிகைகளில் அப்ஸர கன்னிகைகளுடன் விளையாடு கின்றனர்.

சிவபெருமாளை பக்தியுடன் போற்றிப் புகழ்பவர்கள் தேலோக மாளிகைகளில் சுகத்தைப் பெறுகின்றனர்.

**शम्भो प्रसिद्धविबुधाधिपसिद्धसाध्य -**
**विद्याधर हरि पितामहलोकपालाः ।**
**अन्येऽपि साधु विधिना सुधियो भवन्त -**
**माराध्य जग्मुरमराः परमामरत्वम् ॥ ११ ॥**

**ஶம்போ4 ப்ரஸித்3த4விபு3தா4தி4பஸித்3த4ஸாத்4ய -**
**வித்3யாத4ர ஹரி பிதாமஹலோகபாலா: ।**
**அன்யே(அ)பி ஸாது4 விதி4ந ஸுதி4யோ ப4வந்த -**
**மாராத்4ய ஜக்3முரமரா: பரமாமரத்வம் ॥ 11 ॥**

11. ஓ சம்புவே! பிரஸித்தமான இந்திரன், சித்தர்கள், ஸாத்யர்கள், வித்தியாதரர்கள், திருமால், நான்முகன், திசைக்காவலர் முதலானவர்கள் மற்றும்

நல்லறிவு படைத்தவர்கள் நல்லதொரு முறையில் உம்மை வழிபட்டு இறப்பில்லாத அவர்கள் அதனிலும் மேம்பட்ட நிலையை அடைந்தார்கள்.

தேவர்கள் முதலான எல்லா அமரர்களுக்கும் அதனிலும் மேம்பட்ட நிலை சிவவழிபாட்டினால் கிடைக்கின்றது.

**गौरीप्रदानसमये गदितेऽचलेन**
**गोत्रं तवेश किमिति क्षणजातचित्तम् ।**
**धन्यैः पितामहपुरन्दरलोकपालै-**
**दृष्टं निरुत्तरमुखं भवतो हसद्भिः ॥ १२ ॥**

**கௌ³ரீப்ரதா³னஸமயே க³தி³தே(அ)சலேன**
**கோ³த்ரம் தவேஶ கிமிதி க்ஷணஜாதசித்தம் ।**
**த⁴ன்யை: பிதாமஹபுரந்த³ரலோகபாலைர்-**
**த்³ருஷ்டம் நிருத்தரமுக²ம் ப⁴வதோ ஹஸத்³பி⁴: ॥ 12 ॥**

12. ஹே ஈசனே! கௌரியை விவாஹம் செய்து கொடுக்கும் பொழுது இமவானால் உம்முடைய கோத்திரம் என்ன என்று கேட்கப்பட்டபொழுது சிந்தனையுடன் கூடிய உம்முடைய முகம், பாக்கியசாலிகளான நான்முகன், இந்திரன், மற்றும் திசைக் காவலர்கள் முதலியவர்களால் சிரித்தவண்ணம் பார்க்கப்பட்டது.

பரமனின் குலம் கோத்திரம் என்னவென்று யாரால் தான் கூறமுடியும்!

**झङ्कारडम्बर विराजिजलाकुलेषु**
**कैलासमेरु गिरिगह्वर निर्झरेषु ।**
**ते प्राप्नुवन्ति सुरसिद्धवधूकुलनि**
**ये नीलकण्ठ तव पादयुगं नमन्ति ॥ १३ ॥**

**ஜ²ங்காரட³ம்ப³ர விராஜிஜலாகுலேஷு**
**கைலாஸமேரு கி³ரிக³ஹ்வர நிர்ஜ²ரேஷு ।**
**தே ப்ராப்னுவந்தி ஸுரஸித்³த⁴வதூ⁴குலனி**
**யே நீலகண்ட² தவ பாத³யுக³ம் நமந்தி ॥ 13 ॥**

13. ஓ நீலகண்டனே! எவர்கள் உம்முடைய இருதிருவடிகளை வணங்குகின்றனரோ அவர்கள் கூட்டமான தேனீக்கள் எழுப்பும் ஒலியைப் போன்றதொரு ஒலி நிரம்பிய நீர் நிலைகளில் கைலாயம், மேருமலை போன்ற மலைகளிலுள்ள குகைகளிலி

ருந்து பெருகும் நீர்வீழ்ச்சிகளில் தேவர்கள், சித்தர்கள் முதலானவர்களின் மனைவி மக்களின் கூட்டங்களை அடைகிறார்கள்.

சிவபெருமானை வழிபடுபவர் தேவர்களிருக்கும் இடத்தை அடைகிறார்கள்.

**अन्येऽरविन्दमकरन्त हृतालि वृन्द -**
**मन्दारकुन्ददल दामभिरिन्दुमौले ।**
**पूजां विधाय भवतो विलसन्ति देव**
**देवन्द्रमन्दिरवरे सहसुन्दरीभिः ॥ १४ ॥**

**அன்யே(அ)ரவிந்த³மகரந்த ஹ்ருதாலி வ்ருந்த³ -**
**மந்தா³ரகுந்த³த³ல தா³மபி⁴ரிந்து³மௌலே ।**
**பூஜாம் விதா⁴ய ப⁴வதோ விலஸந்தி தே³வ**
**தே³வந்த்³ரமந்தி³ரவரே ஸஹஸுந்த³ரீபி⁴: ॥ 14 ॥**

14. பிறை மதியைத் தலையில் தரித்தவனே! மற்றும் சிலர் தாமரை மலர்களின் மகரந்தத்துகள்களைக் கவரும் வண்டுகளையுடைய மந்தார, மல்லிகை மலர்களின் இதழ்களினாலும் உம்மை வழிபட்டு ஓ தேவனே! தேவேந்திரனின் மாளிகையில் அழகிய பெண்டிருடன் கூட மகிழ்கின்றனர்.

மலர்களால் சிவபெருமானுக்குச் செய்யும் வழிபாடு மிகவும் மேம்பட்ட பயனை அளிக்க வல்லது.

**गर्जत्प्रचण्डघनघर्घरमेघसङ -**
**सङ्घट्टघोषघनगोररवेण कोऽन्यः ।**
**श्वेतं नयन्तमतिघोरकरालकालं**
**भस्मावशेषमकरोद्धुरहुङ्कृतेन ॥ १५ ॥**

**க³ர்ஜத்ப்ரசண்ட³க⁴னக⁴ர்க⁴ரமேக⁴ஸங -**
**ஸங்க⁴ட்டகோ⁴ஷக⁴னகோ³ரரவேண கோ(அ)ன்ய: ।**
**ஶ்வேதம் நயந்தமதிகோ⁴ரகராலகாலம்**
**ப⁴ஸ்மாவஶேஷமகரோத்³த⁴ரஹுங்க்ருதேன ॥ 15 ॥**

15. கர்ஜித்துக் கொண்டு மிகவும் பலத்த கனமான ஓசையுடன் கூடிய கூட்டமான மேகங்களின் மோதல்களினால் ஏற்படும் ஒலியைப் போன்று மிகவும் கோரமான ஓசையினால் சுவேத முனிவரை அழைத்துச் செல்லும் மிகவும் கொடிய

அச்சுறுத்தும் காலஜன சிவனுர் தன்னுடைய ஹும்காரத்தினுல் சாம்பலாகச் செய்தார். வேறெவர் தான் இதைச் செய்வர்.

சுவேத முனிவருக்காக சிவபெருமான் காலஜன சாம்பலாகச் செய்த விஷயம் இலிங்கபுராணத்திலும் வருணிக்கப்பட்டுள்ளது. வழக்கிலுள்ள மார்க்கண்டேயரின் கதையை இக்கதை ஒத்திருப்பது கவனிக்கத்தக்கது.

**ये जीवनाय भवभस्मजटास्थिमाला**
**मायाविनोऽपि दधते हि भवन्ति शम्भो ।**
**कर्णाटलाटभटहेम किरीटकोटि-**
**सङ्घट्टपृष्टचरणा यदि भूमिपालाः ॥ १६ ॥**

**யே ஜீவனுய ப⁴வப⁴ஸ்மஜடாஸ்தி²மாலா**
**மாயாவினே(அ)பி த³த⁴தே ஹி ப⁴வந்தி ஶம்போ⁴ ।**
**கர்ணுடலாடப⁴டஹேம கிரீடகோடி-**
**ஸங்க⁴ட்டப்ருஷ்டசரணு யதி³ பூ⁴மிபாலாঃ ॥ 16 ॥**

16. ஹே சம்புவே! உம்முடைய விபூதியையும் சடைமுடியையும் எலும்பு மாஜலயையும் எந்த செப்பிடு வித்தைக்காரர்களும் தங்கள் பிழைப்பிற்காக அணிகின்றனரோ, அவர்களும், கர்நாடகம், லாடம் இந்த தேசங்களின் பல போர் வீரர்களின் தங்கமயமான கிரீடங்களின் உராய்தலினுல் தேய்வு பெறும் காலடிகஜள உடைய மன்னவன் ஆகின்றனர்.

சிவபெருமானுக்குப் பிரியமான பொருள்கஜள எவனெருவன் அணிகின்ருனே அதனுலேயே அவனுக்கு மிகுந்த உயர்வு ஏற்படுகிறது.

**क्रीडाप्रपञ्चनिरताश्शिशवो भवन्त**
**माराधयन्ति विविधेषु वनेषु देवाः ।**
**सिद्धाः समस्तकुलशैलगुहान्तरेषु**
**विद्याधराः मलयमन्दरकन्दरेषु ॥ १७ ॥**

**க்ரீடா³ப்ரபஞ்சநிரதாஶ்ஶிஶவோ ப⁴வந்த**
**மாராத⁴யந்தி விவிதே⁴ஷு வனேஷு தே³வாঃ ।**
**ஸித்³தா⁴ঃ ஸமஸ்தகுலஶைலகு³ஹாந்தரேஷு**
**வித்³யாத⁴ராঃ மலயமந்த³ரகந்த³ரேஷு ॥ 17 ॥**

**17.** விளையாட்டைப் போன்ற பிரபஞ்சத்தில் ஈடுபாடுடையவர்களாகக் குழந்தைகள் போன்றும் காடுகளில் தேவர்களும், வசிக்குமிடங்களனைத்திலும் மலைகளின் குகைகள் இவைகளிலும் சித்தர்களும் 'மலயம்' என்னும் மலையின் குகைகளில் வித்யாதரர்களும் உம்மை வழிபடுகிறார்கள்.

பல்வேறு இடங்களில் பலவிதமான மக்கள் சிவனை வழிபடுகிறார்கள்.

**हे देव हेमपुररम्यरसातलेषु**
**नागाङ्गनाभिरसुरेन्द्रनितम्बिनीभिः ।**
**नित्यं नितम्बभरमन्मथगामिनीभि -**
**राराध्यसे च हर मन्मथविह्वलादिभिः ॥ १८ ॥**

**ஹே தே³வ ஹேமபுரரம்யரஸாதலேஷு**
**நாகா³ங்க³நாபி⁴ரஸுரேந்த்³ரநிதம்பி³னீபி⁴: ।**
**நித்யம் நிதம்ப³ப⁴ரமன்மத²கா³மினீபி⁴ -**
**ராராத்⁴யஸே ச ஹர மன்மத²விஹ்வலாதி³பி⁴: ॥ 18 ॥**

**18.** ஹே தேவனே! பாதாள லோகத்திலுள்ள ஹேமபுரமென்னும் அழகிய பட்டணத்திலுள்ளவரும், பருத்த பின் புறத்தை உடையவர்களானதால் மெதுவாகச் செல்பவர்களும், காமம் மேலிட்டு குழப்பமடைந்தவர்களுமான நாககுல பெண்டிராலும், அரக்க குல அரச பெண்டிராலும் நீர் நித்தியம் வழிபடப்படுகின்றீர்.

நீர் நித்யம் எல்லோராலும் வழிபடப்படுகின்றீர்.

**दिव्यौषधीरसरसायनधातुवादा**
**योगा वशीकरणगारुड खन्यवादाः ।**
**पातालखड्गघटिकाञ्चनसिद्धिवादाः**
**सिध्यन्ति तस्य शिव यस्य भवान् प्रसन्नः ॥ १९ ॥**

**தி³வ்யௌஷதீ⁴ரஸரஸாயனதா⁴துவாதா³**
**யோகா³ வஶீகரணகா³ருட³ க²ன்யவாதா³: ।**
**பாதாலக²ட்³க³க⁴டிகாஞ்சனஸித்³தி⁴வாதா³:**
**ஸித்⁴யந்தி தஸ்ய ஶிவ யஸ்ய ப⁴வான் ப்ரஸன்ன: ॥ 19 ॥**

**19.** ஹே சிவனே! எவருக்கு நீர் பிரஸன்னமாக இருக்கின்றீரோ அவருக்கு திவ்யமான மூலிகைகளின் ரஸங்களின் சேர்க்கையாலான மருந்துகளில் தேர்ச்சியும்,

வசீகரணம் செய்வது, கருடவித்யை, தாதுப்பொருள்கள் இவற்றில் தேர்ச்சியும், பல விதமான ஸித்திகளும் கைகூடுகின்றன.

உம்மை வழிபடுபவர்களுக்கு எல்லாவிதமான ஸித்திகளிலும் தேர்ச்சி கிடைக் கின்றது.

**पातालताल तलदानवसुन्दरीभि -**
**रालिङ्गिता मकरकेतुशरातुराभिः ।**
**ते शेरते ध्वजपटाकुलमन्दिरेषु**
**येषां त्वमेव शिव पुण्यवदां प्रसन्नः ॥ २० ॥**

**பாதாலதால தலதா³னவஸுந்த³ரீபி⁴ -**
**ராலிங்கி³தா மகரகேதுஶராதுராபி⁴꞉ ।**
**தே ஶேரதே த்⁴வஜபடாகுலமந்தி³ரேஷு**
**யேஷாம் த்வமேவ ஶிவ புண்யவதா³ம் ப்ரஸன்ன꞉ ॥ 20 ॥**

20. ஹே சிவபெருமானே! புண்ணியம் செய்த எவர்களுக்கு நீங்கள் பிரஸ ன்னமாக இருக்கின்றீரோ அவர்கள் பாதாள லோகத்திலடியிலுள்ள கொடிகள் பறந்து கொண்டிருக்கும் மாளிகைகளில் உள்ள காமனின் கணைக்கிக்கானவரான அழகிய அரக்கப் பெண்டிரால் அணைத்துக் கொள்ளப் பட்டவர்களாக உறங்குகின்றுர்கள்.

பரமன் எவருக்கு பிரஸன்னமோ அவர்கள் பொழுதை இன்பமகாக் கழிக்கின் றுர்கள்.

**स्वर्गे विचित्रसुरपादपमञ्जरीभि -**
**मन्दाकिनीकनकपङ्कजयोजिताभिः ।**
**इन्द्राप्सरोभिरमरैरसुरैरुपेतः**
**पूजां विधाय भवतः प्रणतो महेश ॥ २१ ॥**

**ஸ்வர்கே³ விசித்ரஸுரபாத³பமஞ்ஜரீபி⁴ -**
**மந்தா³கினீகனகபங்கஜயோஜிதாபி⁴꞉ ।**
**இந்த்³ரராப்ஸரோபி⁴ரமரைரஸுரைருபேத꞉**
**பூஜாம் விதா⁴ய ப⁴வத꞉ ப்ரணதோ மஹேஶ ॥ 21 ॥**

21. ஹே மஹேச்வரனே! உம்மைச் வழிபட்டு வணங்குபவர் ஸ்வர்க்க லோகத்தில் விசித்திரமான தெய்வீகமான செடிகளின் மலர்களுடனும் தேவலோக கங்கை நீரில் வளரும் தங்கமயமான தாமரை மலர்களுடனும் கூடிய இந்திரன்

மற்றும் தேவர்கள், அப்ஸரஸ்ஸுகள், அரக்கர்கள், இவர்களுடன் கூடியவராக ஆகின்றார்.

இறைவனை வணங்குபவர்கள் தேவர்களுடன் கூட இன்பமாகக் காலத்தைக் கழிக்கின்றனர்.

**त्वां दीप्यमानमकुटोत्कटचा रुहार-**
**केयूरकुण्डलधरा गिरिगह्वरेषु ।**
**गन्धर्वलो कललनाललितैर्वचोभि-**
**रुच्चैः कृताञ्जलिपुटं भगवंस्तुवन्ति ॥ २२ ॥**

**த்வாம் தீ³ப்யமானமகுடோத்கடசா ருஹார-**
**கேயூரகுண்ட³லத⁴ரா கி³ரிக³ஹ்வரேஷு ।**
**க³ந்த⁴ர்வலோ கலலனாலலிதைர்வசோபி⁴-**
**ருச்சை²ஃ க்ருதாஞ்ஜலிபுடம் ப⁴க³வம்ஸ்துவந்தி ॥ 22 ॥**

22. ஹே பகவானே! மிகவும் அழகாக அமைக்கப்பட்ட ஒளி வீசிக் கொண்டிருக்கும் மகுடங்களையும் அழகான மாலைகளையும், புஜத்தில் அணியும் கேயூரம் என்னும் ஆபரணத்தையும், காதில் குண்டலங்களையும் அணிந்து கொண்டவராய் மலைக்குகைகளில் கந்தர்வ லோகப் பெண்டிர் மிகவும் இனிமையான சொற்களால் உரத்த குரலில் கூப்பிய கைகளுடன் உம்மைப் புகழ்கின்றார்கள்.

நன்கு அலங்காரம் செய்து கொண்ட கந்தர்வ லோகப் பெண்டிர் சிவபெருமானைப் புகழ்ந்து பாடுகின்றனர்.

**ज्ञानं त्रिकालविषयं गगनेचरत्व-**
**मैश्वर्यमष्टगुणितं श्रवणञ्च दूरात् ।**
**उत्क्रान्ति मुक्तिपरकायपरप्रवेशौ**
**शम्भो भवन्ति भविनां भवतः प्रसादात् ॥ २६ ॥**

**ஜ்ஞானம் த்ரிகாலவிஷயம் க³க³னேசரத்வ-**
**மைஶ்வர்யமஷ்டகு³ணிதம் ஶ்ரவணஞ்ச தூ³ராத் ।**
**உத்க்ராந்தி முக்திபரகாயபரப்ரவேஶௌ**
**ஶம்போ⁴ ப⁴வந்தி ப⁴வினம் ப⁴வதஃ ப்ரஸாதா³த் ॥ 26 ॥**

23. ஹே சம்புவே! உம்முடைய அருளினால் கவிகளுக்கு முக்காலத்தைப் பற்றிய ஞானமும், ஆகாயத்தில் சஞ்சரிக்கும் தன்மையும், எட்டு வகையான ஐச்வர்

யங்களும், தொலைவிலிருந்து கேட்கக் கூடிய திறமையும், மேலே எழும்பிச் செல்லும் சக்தியும் (விரும்பும் பொழுது) உடலைத் துறக்கும் சக்தியும், பிறருடலில் புகும் சக்தியும் கிடைக்கின்றன. சிவபெருமானுடைய கருணையினால் எல்லாவித சக்திகளும் கிடைக்கின்றன.

எட்டு ஐச்வர்யங்கள் என்பவை - அணிமா, லகிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், மஹிமா, ஈசத்வம், வசித்வம், காமாவஸாயிதா ஆகும். இவையாவன முறையே அணுவைப் போன்ற உருவைப் பெறுதல், நினைத்த மாத்திரம் மிகவும் லேசான உருவைப் பெறுதல், நினைத்த மாத்திரத்தில் விரும்பிய பொருளைப் பெறுதல், உறுதியான மனோதிடம், நினைத்த மாத்திரத்திலேயே மிகப் பெரிய உருவைப் பெறுதல், எல்லோரையும் விட மேம்பட்ட தன்மை, மற்றவரைக் கவரும் தன்மை, ஆசையை அடக்கும் தன்மை முதலியனவாகும்.

**उक्तं शिवेति शिव येन दिवापि रात्रा -**
**वुत्कण्ठनाद्धर हरेति सकृन्मृषापि ।**
**सत्यं ब्रवीमि सुरनाथ न पक्षपातं**
**मूढोऽपि घोरनरकात् स बिभेति कस्मात् ॥ २४ ॥**

**உக்தம் ஶிவேதி ஶிவ யேன தி³வாபி ராத்ரா -**
**வுத்கண்ட²நாத்³த⁴ர ஹரேதி ஸக்ருன்ம்ருஷாபி ।**
**ஸத்யம் ப்³ரவீமி ஸுரநாத² ந பக்ஷபாதம்**
**மூடோ⁴(அ)பி கோ⁴ரநரகாத் ஸ பி³பே⁴தி கஸ்மாத் ॥ 24 ॥**

**24.** தேவர்களுக்குத் தலைவனே! எவனொருவனால் இரவிலோ அல்லது பகலிலோ சிவ! சிவ! என்றோ அல்லது ஒரு நோக்கமுமின்றி ஒரு தடவையேனும் ஹர! ஹர! என்றோ கூவப்பட்டதோ உண்மையாக ஒரு பக்ஷபாதமுமின்றிக் கூறினால் அறிவில்லாதவனும் கூட எந்தக் கொடிய நரகத்திலிருந்து பயப்படுவான்?

**चर्याव बोधरहितो भवभक्तिमात्रान्**
**नीतस्त्वया शिवपुरं यदहो किरातः ।**
**यातः स्मरन् कपटकापुरुषोऽमरत्वं**
**यद्येव मुक्तिरसमा भवतः प्रसादात् ॥ २५ ॥**

**சர்யாவ போ³த⁴ரஹிதோ ப⁴வப⁴க்திமாத்ராந்**
**நீதஸ்த்வயா ஶிவபுரம் யத³ஹோ கிராதஃ ।**
**யாதஃ ஸ்மரன் கபடகாபுருஷோ(அ)மரத்வம்**
**யத்³யேவ முக்திரஸமா ப⁴வதஃ ப்ரஸாதா³த் ॥ 25 ॥**

25. முறைப்படி ஒரு குருவினிடமிருந்து வழிபடும் முறைகளை அறியாத வேடன் ஒருவனும்; உம்மிடமுள்ள பக்தியினால் மட்டுமே உம்மை நினைவில் கொண்டே உம்மால் கைலாயத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டான். ஏமாற்றி பித்தலாட்டம் செய்பவனும் நிந்திக்கத் தகுந்த ஒருவனும் உம்முடைய அருளாலேயே ஈடு இணையற்ற தெய்வீகத் தன்மையையோ அல்லது மோக்ஷத்தையோ பெறுவர் என்பதில் ஒரு ஸந்தேஹமுமில்லை.

கண்ணப்பனின் வழிபாட்டு முறைகளை நினைவில் கொண்டு இறைவனின் வழிபாட்டில் பக்தியே மிகவும் அவசியமானது என்று கவி கூறுகிறார்.

**तस्मात् करोमि यदभीकरमप्रमेयं**
**मूढेन शङ्कर मया यदकारि पापम् ।**
**स त्वं पशुत्वतिमिरं भवपाशमोश**
**छिन्धि प्रसक्ष भगवन्नपुनर्भवाय ॥ २६ ॥**

**தஸ்மாத் கரோமி யத³பீ⁴கரமப்ரமேயம்**
**மூடே⁴ன ஶங்கர மயா யத³காரி பாபம் ।**
**ஸ த்வம் பஶுத்வதிமிரம் ப⁴வபாஶமோஶ**
**சி²ந்தி⁴ ப்ரஸக்ஷ ப⁴க³வன்னபுனர்ப⁴வாய ॥ 26 ॥**

26. அதனால் ஹே சங்கரனே! பயத்தைப் பற்றி நினையாமல் அளவிட முடியாத எந்த பாவத்தைச் செய்கின்றேனே, மூடனான என்னால் எந்தப் பாவம் செய்யப்பட்டதோ இவை யாவற்றையும் பொறுத்துக் கொண்டு ஹே ஈச்வரனே! ஹே இறைவனே எனக்கு மீண்டும் பிறப்பும் இறப்புமின்றி பசுத்தன்மையின் இருள் போன்ற பிறப்பிறப்பென்னும் பாசத்தை நீர் அறுத்து விடும்.

**त्वत्पादपूजनरता मुनयो वनेषु**
**तिष्ठन्ति मूलदल कन्दफलाशिनो ये ।**
**ते यान्ति मुक्तिफलमीश्वर तावदास्तां**
**धन्यास्तु ते तव मुखान्यवलोकयन्ति ॥ २७ ॥**

**த்வத்பாத³பூஜனரதா முனயோ வனேஷு**
**திஷ்ட²ந்தி மூலத³ல கந்த³ப²லாஶினோ யே ।**
**தே யாந்தி முக்திப²லமீஶ்வர தாவதா³ஸ்தாம்**
**த⁴ந்யாஸ்து தே தவ முகா²ன்யவலோகயந்தி ॥ 27 ॥**

**27.** ஈசனே! எந்த முனிவர்கள் காடுகளில் வேர்கள், தளங்கள், கிழங்குகள், பழங்கள் இவைகளை உண்பவர்களாக உம்முடைய பாதங்களைத் தொழுவதில் ஈடுபட்டவர்களாக இருக்கின்றுர்களோ அவர்கள் முக்தி என்னும் பழத்தை அடைகிறுர்கள் என்பதிருக்கட்டும். அதைக் காட்டிலும் அவர்கள் பாக்கியசாலிகள். ஏனென்றல் அவர்கள் உம்முடைய முகத்தையே காண்கின்றுர்கள்.

முக்தியைப் பெறுவது என்பதைக் காட்டிலும் இறைவனைக் காணக் கிடைப்பது என்பது போற்றத்தகுந்ததல்லவா.

**स्फीते प्रथिम्नि जघने घनपाटलिम्नि**
**बिम्बाधरे कुचयुगे द्युतपिञ्जलिग्नि ।**
**स्त्रीणां महेश विलसन्ति कुतो नराश्च**
**यैर्नार्चितोऽसि न नतोऽसि न संस्तुतोऽसि ॥ २८ ॥**

**ஸ்பீ²தே ப்ரதி²ம்னி ஜக⁴னே க⁴னபாடலிம்னி**
**பி³ம்பா³த⁴ரே குசயுகே³ த்³யுதபிஞ்ஜலிக்³னி ।**
**ஸ்த்ரீணும் மஹேஶ விலஸந்தி குதோ நராஶ்ச**
**யைர்ஞர்சிதோ(அ)ஸி ந நதோ(அ)ஸி ந ஸம்ஸ்துதோ(அ)ஸி ॥ 28 ॥**

**28.** ஹே மஹேச்வரனே! பெண்களின் பருத்த விசாலமான பின்புறத்திலும், பிம்ப பழத்தைப் போன்று அடர்ந்த சிவப்பு நிறங்கொண்ட உதட்டிலும், பிரகாசிக்கும் சிவந்த மஞ்சள் நிறத்தில் உள்ள ஸ்தனங்களிலும் களிக்கும் மக்களால் ஏன் நீங்கள் வழிபடப்படுவதில்லை அல்லது வணங்கப்படுவதில்லை அல்லது துதிக்கப்படுவதில்லை?

**प्रोद्धामकाममदिरामदलोलनेत्रा**
**रत्नावलीझणझणा रवरम्यगात्राः ।**
**ते यशलोक वनितासु चिरं रमन्ते**
**ये त्वां स्मरन्ति सततं मकरध्वजारे ॥ २९ ॥**

**ப்ரோத்³தா⁴மகாமமதி³ராமத³லோலநேத்ரா**
**ரத்ஞவலீஜ²ணஜ²ணு ரவரம்யகா³த்ரா: ।**
**தே யஶலோக வனிதாஸு சிரம் ரமந்தே**
**யே த்வாம் ஸ்மரந்தி ஸததம் மகரத்⁴வஜாரே ॥ 29 ॥**

**29.** காமனின் பகைவனே! எவர்கள் இரத்தின மயமான மாலைகளையணிந்து கொண்டு ஜண ஜண என்று சப்தம் செய்யும் அழகிய உடலையுடைவர்களாகவும், மிகவும் அதிகமான காம வேட்கை கொண்டு போதை தரும் பானங்களினுல் மயக்க

முற்று சுழலும் கண்களையுடையவர்களாகவும் உம்மையே எப்பொழுதும் நினைக்கின்றூர்களோ அவர்கள் யக்ஷலோக பெண்டிரின் மத்தியில் நீண்டகாலம் பொழுதை இன்பமாகக் கழிக்கின்றூர்கள்.

சிற்றின்பத்தின் ஈடுபாடு கொண்ட பெண்டிரும் பக்தி செய்தால் மேம்பட்ட இடத்தை அடைகின்றனர்.

**अन्धस्य मे हतविवेकमहाधनस्य**
**चोरैः प्रभो बलिभिरिन्द्रियनामधेयैः ।**
**संसारकूपकुहरे विनिपातितस्य**
**देवेश देहि कृपणस्य करावलम्बम् ॥ ३० ॥**

**அந்த⁴ஸ்ய மே ஹதவிவேகமஹாத⁴னஸ்ய**
**சோரைः ப்ரபோ⁴ ப³லிபி⁴ரிந்த்³ரியநாமதே⁴யைः ।**
**ஸம்ஸாரகூபகுஹரே விநிபாதிதஸ்ய**
**தே³வேஶ தே³ஹி க்ருபணஸ்ய கராவலம்ப³ம் ॥ 30 ॥**

30. பிரபுவே! மிகவும் பலமுள்ள இந்திரியங்கள் என்னும் திருடர்களால் அறிவு என்னும் பெருஞ்செல்வம் பறிமுதல் செய்யப்பட்டவனும், குருடனுனவனும், வாழ்க்கை என்னும் மிகவும் ஆழமான கிணற்றில் தள்ளப்பட்டவனும் செய்வதறியாத வனுமான எனக்கு தேவர்களுக்குத் தலைவனே! கை கொடுத்துதவுங்கள்.

இந்திரியங்களால் தன்னறிவு இழந்தவனை உய்விக்க கை கொடுத்துதவ வேண்டுகின்றூர் கவி.

**मूढो विवेक विकलोऽसकृदूर्ध्वबाहुः**
**किन्न शृणोषि यदहं हर रारटामि ।**
**मां तत्र कर्मणि नियोजय देव येन**
**संसारचक्रगहनं न पुनर्विशामि ॥ ३१ ॥**

**மூடோ⁴ விவேக விகலோ(அ)ஸக்ருதூ³ர்த்⁴வபா³ஹுः**
**கின்ன ஶ்ருணோஷி யத³ஹம் ஹர ராரடாமி ।**
**மாம் தத்ர கர்மணி நியோஜய தே³வ யேன**
**ஸம்ஸாரசக்ரக³ஹனம் ந புனர்விஶாமி ॥ 31 ॥**

31. ஹே ஹரனே! பகுத்தறிவில்லாத முட்டாளான நான் கைகளை உயர்த்திய வண்ணம் பலமுறை உரக்கக் கூவுவதை நீங்கள் கேட்கவில்லையா என்ன?

ஓ தேவனே! மிகவும் ஆழமான வாழ்க்கைச் சக்கரத்தில் எதனுல் நான் மீண்டும் நுழைய மாட்டேனே அவ்வித வேலையைச் செய்வதில் என்னை ஈடுபடுத்தும்.

பிறப்பிறப்புச் சக்கரத்தினின்று விடுதலே அளிக்க மிகவும் உருக்கமாக வேண்டுகிறுர் கவி.

**मायाप्रपञ्चरचनाचतुरा समस्त**
**वस्तु प्रभेदभिदुरा शिव सर्वकर्त्री ।**
**संसारपाशविषमच्छिदुरा नराणां**
**मोहान्धकारभिदुरा च तवैव शक्तिः ॥ ३२ ॥**

**மாயாப்ரபஸ்ஞ்சரசனுசதுரா ஸமஸ்த**
**வஸ்து ப்ரபே⁴த³பி⁴து³ரா ஶிவ ஸர்வகர்த்ரீ ।**
**ஸம்ஸாரபாஶவிஷமச்சி²து³ரா நராணாம்**
**மோஹாந்த⁴காரபி⁴து³ரா ச தவைவ ஶக்திः ॥ 32 ॥**

32. ஹே சிவனே! மாயமான பிரபஞ்சத்தை உண்டாக்குவதில் திறமை, பலரகமான பொருள்களே சேர்த்து வைப்பது, எல்லாவற்றையும் செய்யும் திறமை, வாழ்க்கை என்னும் பாசமாகிற விஷத்தை பிளப்பது, மனிதர்களின் மோஹம் என்னும் இருளேப் பிளப்பது முதலானவற்றிற் கெல்லாம் உமக்குத்தான் சக்தி இருக்கிறது.

**छित्त्वा समस्तमशुभं भवपाशराशि -**
**मीषत्प्रकाशमवशं स्वबलासिना मे ।**
**तेजो निधानममलं भगवन् प्रयच्छ**
**सर्वज्ञता युतमशेषकरं शिवत्वम् ॥ ३३ ॥**

**சி²த்த்வா ஸமஸ்தமஶுப⁴ம் ப⁴வபாஶராஶி -**
**மீஷத்ப்ரகாஶமவஶம் ஸ்வப³லாஸினு மே ।**
**தேஜோ நிதா⁴னமமலம் ப⁴க³வன் ப்ரயச்ச²**
**ஸர்வஜ்ஞதா யுதமஶேஷகரம் ஶிவத்வம் ॥ 33 ॥**

33. ஹே பகவானே! வெளிப்படையாகக் கொஞ்சமே தெரிவதும் வசப்படுத்த முடியாததுமான எல்லாக் கெடுதல்களேயும், பிறப்பு இறப்பு போன்ற பல குவியல்களேயும் தன் பலம் என்னும் கத்தியால் களேந்து கொண்டு என்னுடைய தேஜஸின் இருப்பிடம் அழுக்கற்று இருக்க எல்லாவற்றையும் அறிதல், வேலே முழுவதையும் முடித்தல் போன்ற சிவபெருமானின் தன்மையைக் கொடும்.

**बालोऽपि संस्मरणमात्रमचेतनस्ते**
**लिङ्गं करोति हर पांसुमयं विनोदात् ।**
**अत्यन्त देश धन धान्य समृद्धिभाजि**
**राज्यं करोषि हतकण्ठकमुन्नतं च ॥ ३४ ॥**

**பா³லோ(அ)பி ஸம்ஸ்மரணமாத்ரமசேதனஸ்தே**
**லிங்க³ம் கரோதி ஹர பாம்ஸுமயம் விநோதா³த் ।**
**அத்யந்த தே³ஶ த⁴ன தா⁴ன்ய ஸம்ருத்³தி⁴பா⁴ஜி**
**ராஜ்யம் கரோஷி ஹதகண்ட²கமுன்னதம் ச ॥ 34 ॥**

**34.** ஹே ஹரனே! ஒரு சிறு குழந்தையும் பொழுது போக்காக மண்ணாலான தும் உயிரற்றதுமான உம்முடைய லிங்க உருவைச் செய்கின்றான் எனில் நீர் (அவனை) இடையூறுகள் யாவும் அகற்றப்பட்டதாயும், மிகவும் மேம்பட்டதாகவும் உள்ளதும் பரந்த தேசம், பணம், தானியம் இவைகள் நிறைந்தும் உள்ள இராஜ்யத் தைப் பெறுபவனாகச் செய்கின்றீர்.

பொழுது போக்காக மண்ணால் ஒரு லிங்கம் செய்பவனும் அளவிட முடியாத பலனைப் பெறுகின்றான்.

**ये पापकर्मगुरुतल्पघहेमचोर -**
**ब्रह्मघ्नगोघ्नचपलातुरपातकाश्च ।**
**ते नीलकण्ठ परमेश्वरपादलग्न -**
**निर्धौत पापशशिनिर्मलशुद्धदेहा ॥ ३५ ॥**

**யே பாபகர்மகு³ருதல்பக⁴ஹேமசோர -**
**ப்³ரஹ்மக்⁴னகோ³க்⁴னசபலாதுரபாதகாஶ்ச ।**
**தே நீலகண்ட² பரமேஶ்வரபாத³லக்³ன -**
**நிர்தௌ⁴த பாபஶஶிநிர்மலஶுத்³த⁴தே³ஹா ॥ 35 ॥**

**35.** ஹே நீலகண்டனே! எவர்கள் குருவிற்குத் துரோகம் செய்தல், பொன்னைத் திருடுதல், ஒரு அந்தணனைக் கொல்லுதல், பசுவைக் கொல்லுதல் போன்ற பாவச் செயல்களையும், சபலம் அல்லது ஆவல் மிகுதியால் ஏற்பட்ட பாவங்களையும் செய்தவர்களோ அவர்கள் பரமேச்வரனின் பாதத்தைப் பணிந்ததினால் கழுவப்பட்ட பாவங்களையுடையவர்களாய் அழுக்கற்ற சந்திரனைப் போன்ற சுத்தமான தேகத்தை உடையவர்களாக ஆகின்றனர்.

**ये त्वां विभो सवनकालन कल्पितेषु**
**सम्यग्यजन्ति विविधेषु शिवव्रतेषु ।**
**ते चातुरङ्ग घनकुङ्कुमपिञ्जरेषु**
**विद्याधरीषु विलसन्ति कुचान्तरेषु ॥ ३६ ॥**

**யே த்வாம் விபோ⁴ ஸவனகாலன கல்பிதேஷு**
**ஸம்யக்³யஜந்தி விவிதே⁴ஷு ஶிவவ்ரதேஷு ।**
**தே சாதுரங்க³ க⁴னகுங்குமபிஞ்ஜரேஷு**
**வித்³யாத⁴ரீஷு விலஸந்தி குசாந்தரேஷு ॥ 36 ॥**

**36.** எல்லாம் வல்லவரே! எவர்கள் பூஜாகாலங்களில் ஏற்படுத்தப்பட்ட பல்வேறுன சிவவிரதங்களிஞல் உம்மை நன்கு வழிபடுகின்றனரோ அவர்கள் அழகிய அங்க அமைப்பைப் பெற்றவரும் அடர்த்தியான குங்குமத்துடன் கூட சிவந்த மஞ்சள் நிறமுடைய ஸ்தனங்களுடன் கூடிய வித்யாதரப் பெண்டிரின் மத்தியில் மகிழ்கின் ருர்கள்.

**यत्पद्यते कमलयोनिरभिष्टुवंस्तं**
**साक्षात् चतुर्भिरधिनाथ मुखैर्भवन्तम् ।**
**त्यक्ता वयं तु धन संस्तवनक्रियासु**
**भक्तिप्रमाणमिति सर्वमिदं क्षमस्व ॥ ३७ ॥**

**யத்பத்³யதே கமலயோநிரபி⁴ஷ்டுவம்ஸ்தம்**
**ஸாக்ஷாத் சதுர்பி⁴ரதி⁴நாத² முகை²ர்ப⁴வந்தம் ।**
**த்யக்தா வயம் து த⁴ன ஸம்ஸ்தவனக்ரியாஸு**
**ப⁴க்திப்ரமாணமிதி ஸர்வமித³ம் க்ஷமஸ்வ ॥ 37 ॥**

**37.** நான்முகனுனவர் உம்மை துதித்து எதை அடைந்தாரோ, உண்மையாகச் சொன்ஞல், அது மிகவும் சக்திவாய்ந்த அவருடைய நான்கு முகங்களிஞல் உம்மைத் துதித்துப் பெற்றது என்பேன். நாங்களோவென்றல் செல்வத்தைப் புகழும் செயல்களில் ஈடுபட்டிருப்பவர்கள். பக்திதான் பிரமாணம் என்று இவை யாவற்றையும் மன்னித் தருள வேண்டும்.

**गङ्गातरङ्गजलधौतजटाकलाप**
**कामाङ्गदग्धसितभस्मविभूषिताङ्ग ।**
**चन्द्रार्धशूलफणिराज विराजिताङ्ग**
**देवाधिदेव तव पादयुग्मं नमामि ॥ ३८ ॥**

**க³ங்கா³தரங்க³ஜலதௌ⁴தஜடாகலாப**
**காமாங்க³த³க்³த⁴ஸிதப⁴ஸ்மவிபூ⁴ஷிதாங்க³ ।**
**சந்த்³ரார்த⁴ஶூலப²ணிராஜ விராஜிதாங்க³**
**தே³வாதி⁴தே³வ தவ பாத³யுக்³மம் நமாமி ॥ 38 ॥**

**38.** கங்கை நதியின் அலைநீரால் கழுவப்பட்ட சடை முடியோனே, காமனின் உடலை எரித்த வெளுத்த சாம்பலால் அலங்கரிக்கப்பட்ட உடலையுடையோனே, பிறைமதி, சூலம், நாகப்பாம்பு இவைகள் அலங்கரிக்கும் உடலையுடையவனே, தேவர்களுக்கெல்லாம் பெருந்தலைவனே உம்முடைய இருபாதங்களை வணங்குகின்றேன்.

**स्तोत्रं मया कृतमिदं भवतो गणेन**
**वृत्तैर्वसन्ततिलकैश्शिव मल्हणेन ।**
**आयासमत्र भगवन् गदितं दुरुक्तं ।**
**भक्ति प्रमाणमिति सर्वमिदं क्षमस्व ॥ ३९ ॥**

**ஸ்தோத்ரம் மயா க்ருதமித³ம் ப⁴வதோ க³ணேன**
**வ்ருத்தைர்வஸந்ததிலகைஶ்ஶிவ மல்ஹணேன ।**
**ஆயாஸமத்ர ப⁴க³வன் க³தி³தம் து³ருக்தம் ।**
**ப⁴க்தி ப்ரமாணமிதி ஸர்வமித³ம் க்ஷமஸ்வ ॥ 39 ॥**

**39.** ஹே சிவபெருமானே! உம்முடைய கணமான மல்ஹணனை என்னல் இந்த துதியானது வஸந்த திலகமெனும் விருத்தத்தில் செய்யப்பெற்றது. ஹே இறைவனே! இதில் (உங்களுக்கு) ஏற்பட்ட களைப்பையோ அல்லது கூறப்பட்ட கடுஞ்சொற்களையோ (என்) பக்தி தான் பிரமாணம் என்றெண்ணி இவை எல்லாவற்றையும் மன்னித்தருளும்.